## 187. திருப்பழனம்:

திருவையாற்றுக்குக் கிழக்கே 2-மைல் தூரத்திலுள்ளது. இது ஸப்தஸ்தான க்ஷேத்திரங்களில் இரண்டாவது ஸ்தலம்.

"அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே"

என அப்பூதியடிகளின் அடிமைத் திறத்தினை அப்பர் சுவாமிகளே வியந்தேத்தியுள்ள அருமைத் தேவாரப் பதிகத்தைக் கொண்டுள்ள ஸ்தலம். இதற்குச் சமீபத்திலுள்ள திங்களூரில் அப்பர்சுவாமிகள் அப்பூதிநாயனாருடைய பிள்ளை விஷந்தீண்டி இறக்க, அதை "ஒன்று கொலாம்" என்னும் திருப்பதிகம் பாடி எழுப்பி யருளினார்.

## 188. திருப்பழுவூர்:

திருவையாற்றிலிருந்து வடக்கே அரியலூருக்குப் போகும் பாதையில் 10-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

அஷ்டவிரட்டத்திலொன்று; யானையை யுரித்த ஸ்தலம்.

## 189. பழையாறைவடதளி:

இது பழையாறை என்றும் வடதளி என்றும் இரண்டு ஸ்தலங்களாக இருக்கின்றது. பட்டீசுரத்திலிருந்துகிழக்கே $\frac{1}{4}$-மைல்சென்று வடதளி என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து $\frac{3}{8}$-மைல் சென்று பம்பைப்படை என்னும் ஊரைச்சேர்ந்து,தெற்கே திரும்பி திருமலைராயன் ஆற்றைக்கடந்து $\frac{1}{4}$-மைல் சென்றால்பழையாறையை அடையலாம். பழையனூர்-ஆலங்காட்டைப் பாடி யிருப்பதுபோல இந்த இரண்டு ஸ்தலங்களையும் ஒரே பதிகத்தில் சேர்த்துப் பாடி யிருக்கிறது.

வடதளியில் சுவாமி பெயர் தர்மபுரீசுரர். தேவியார் விமல நாயகி. இந்த ஸ்தலம் காமதேனுவின் புத்திரியாகிய விமலி என் பவளாற் பூசிக்கப்பட்டது. ஆலயம் ஒரு மேட்டின்மே லிருக்கிறது. இங்கு சுவாமி, அம்மை தவிர வேறு விக்கிரகம் ஒன்றும் இல்லை. இவ்வாலயத்துக்குச் சமீபத்தில் துறையூர் - சிவப்பிரகாச சுவாமிகளுடைய சமாதியுள்ள கோயில் ஒன்றிருக்கிறது.

பழையாறை—சந்திரன் பூசித்த ஸ்தலம். அமர்நீதி நாயனார் வாழ்ந்திருந்த பதி.

**190. பள்ளியின்முக்கூடல்:**

திருவாரூருக்கு வடகிழக்கு 3-மைல். திருவாரூரிலிருந்து கிழக்கே $1\frac{1}{2}$-மைல் சென்று கயாகரை என்னும் ஸ்தலத்தை யடைந்து, அங்கிருந்து வடக்கே $1\frac{1}{2}$-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். வண்டி போவதுகஷ்டம். கடைசியில் $\frac{1}{2}$-மைல் வயல் வழியேசெல்லவேண்டும். திருவாரூருக்கு வடக்கே $4\frac{1}{2}$-மைலிலுள்ள வெட்டாறு என்னும் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே 1-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

கயாகரையை கேகரை என்று சொல்லுகிறார்கள். இங்கிருக்கும் சிவலிங்கம் இராமர் பூசித்தது. கோயில் சிறிது. சிவலிங்கம் வெகு பளபளப்பா யிருக்கிறது. இவ்வாலயத்துக்கு மேற்பக்கத்தில் இராமசாமி கோயிலுமிருக்கிறது.

**191. திருப்பறியலூர் என்பது பரசலூர்.**

மாயூரம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி வடகிழக்காய் 4-மைல் தூரஞ்சென்று விளநகர் என்னும் ஸ்தலத்தை அடைந்து, பின்னும் 2-மைல் தூரம் அதேபாதையிற்சென்று, அங்கே தெற்கே திரும்பி 1-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

அஷ்டவீரட்டத்திலொன்று. தக்கன் செய்த யாகத்தை அழித்து அவன் தலையைப் பறித்த ஸ்தலம்.

**192. வன்பாத்தான் பனங்காட்டூர் என்பது திருப்பனங்காடு.**

காஞ்சிபுரத்திலிருந்து தெற்கே 4-மைல் சென்று ஐயன்குளம் என்னும் கிராமத்தை அடைந்து, அங்கிருந்து மேற்கே (ஆற்காடு) ஆறுகாட்டுக்குப் போகும் பாதையில் $3\frac{1}{2}$-மைல் சென்று அங்கே வடக்கேதிரும்பி $\frac{3}{4}$-மைல்தூரஞ்சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். வழியில் வேகவதி ஆற்றையும் பாலாற்றையுங் கடக்கவேண்டும். நல்லபாதை. வன்பாக்கம் என்னும் கிராமம் சமீபமாய் (மேற்கே $1\frac{1}{2}$-மைல் தூரத்தில்)இருக்கிறபடியால் இந்தத்தலத்துக்கு **வன்பாத்தான் பனங்காட்டூர்** என்னும் பெயருண்டாயிற்று.

இந்த ஸ்தல ஆலயத்தில் இரண்டு சந்நிதிகளுண்டு. தெற்கிலிருப்பது அகஸ்தியர் பூசித்தது. (சுவாமி-தாளபுரீசுரர். தேவியார்-ஸ்தூலகோமளபதாம்பாள்.) வடக்கிலிருப்பது புலஸ்தியர் பூசித்தது. (சுவாமி-கிருபாநாதேசுரர். தேவியார்-கிருபாநாயகி.)

ஜடாகங்கை-தீர்த்தம். கோயில் மெத்த சிலமாயிருக்கிறது. ஆலயத்துக் கெதிரிலிருந்த இரண்டு பனைமரங்களும் விழுந்துவிட்டன. இப்போது ஒரு சிறு பனங்கன்று மாத்திர மிருக்கிறது.

### 193. திருப்பனந்தாள்:

கும்பகோணத்துக்கு வடகிழக்கு 10-மைல் தூரம். நல்ல பாதை. இவ்வூர் ஆலயத்துக்குத் தாடகேச்சுரம் என்று பெயர்.

தாடகை யென்னும் ஒருமாதின் அன்புக்காகச் சாய்ந்திருந்த சிவலிங்கம்-யானை,சேனை முதலியவைகள் கயிற்றைக்கட்டிக்கொண்டு இழுத்தும் நிமிராமல், குங்குலியக்கலய நாயனார் அக்கயிற்றைத் தம்முடைய கழுத்திற்கட்டி யிழுத்த உடனே அவருடைய அன்புக்காக நிமிர்ந்த ஸ்தலம்

### 194. திருப்பனையூர்:

திருவாரூரிலிருந்து வடக்கே $6\frac{1}{2}$-மைல் தூரஞ் சென்று ஆண்டிப்பந்தல் என்னும் கிராமத்தைச் சேர்ந்து, அங்கிருந்து கிழக்கே 1-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். மேலே சொன்ன $6\frac{1}{2}$-மைல் தூரமும் நல்ல பாதை. மீதி 1-மைலில் $\frac{1}{2}$-மைல் நல்லவழிதான். மற்ற $\frac{1}{2}$-மைலும் வயல்வழியே போகவேண்டும்.

சிவபெருமான் திருக்கூத்தோடு சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் காட்சி கொடுத்தருள அவர் 'மாடமாளிகை' என்னுந் திருப்பதிகம் பாடித் துதித்த ஸ்தலம். திருப்பனையூருக்கு வடக்கே 3-மைலில் திருப்புகலூரும், தென்மேற்கு $1\frac{1}{4}$-மைலில் திருவீழிமிழலையும் இருக்கின்றன. அமிர்தபுஷ்கரணி. பனைவிருக்ஷம்.

### 195. திருப்பாசூர்:

சென்னபட்டணத்துக்கு மேற்கு 26-மைலிலுள்ள திருவெவ்வுளூர் ஸ்டேஷனி லிறங்கி, வடக்கே $2\frac{1}{2}$-மைல்சென்று திருவெவ்வுளூர் க்ஷேத்திரத்தை அடைந்து, அங்கிருந்து மேற்கே 2-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். நல்ல பாதை.

வேறுவழி: ஷை திருவெவ்வுளூர் ஸ்டேஷனுக்கடுத்த கடம்பத்தூர் ஸ்டேஷனிலிறங்கி வடக்கே $3\frac{1}{4}$-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை யடையலாம். சாதாரண பாதை.

சிவபெருமான் ஓர் மூங்கிலடியில் தோன்றி யருளிய ஸ்தலம்.

சமணர்கள், கரிகால் சோழனுக்கு எதிரியான ஓர் குறும்ப ராஜனுக்கு உதவியாக, ஒரு குடத்தில்விட்டு சோழனிடம் அனுப்பின பெரும்பாம்பை அச்சோழனுக்கு உதவியாக சிவபெருமான் எடுத்து ஆட்டி யருளிய ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசுநாயனர் இத்தலத்துக்கு அருளிச்செய்த திறக்குறுந்தொகையில் 4-ஆவது செய்யுளில், "நீளரவந்தனைப், பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே". என்றும், 9-ஆவது செய்யுளில், 'தியதோர்,பாம்பும் ஆட்டுவர் பாசூ ரடிகளே" என்றும், திருத்தாண்டகத்தில் 3-ஆவது செய்யுளில், "படவரவொன் றதுவாட்டிப் பாசூர் மேய, பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே." என்றும் சிறப்பித்துக் கூறி யிருக்கிறார்.

## 196. திருப்பாச்சிலாச்சிராமம் என்பது திருவாசி.

திரிசிராப்பள்ளிமலையிலிருந்து வடக்கே 3-மைல் தூரஞ் சென்று திருஆனைக்கா என்னும் ஸ்தலத்தை அடைந்து,அங்கிருந்து வடமேற்கே 3-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் கொல்லிமழவன் என்னும் அரசனுடைய குமாரத்திக்கு முயலகன் என்னும் வியாதியைத் தீர்த்தருளிய ஸ்தலம்.

## 197. திருப்பாண்டிக்கொடுமுடி:

இஃது இப்போது 'கொடுமுடி' எனவழங்கிவருகிறது. ரெயில் ஸ்டேஷன். திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 62-மைல். கருவூருக்கு மேற்கு 17-மைல். ஈரோட்டுக்குத் தென்கிழக்கு 23-மைல்.

சுந்தரமூர்த்திஸ்வாமிகள் நமச்சிவாயத்திருப்பதிகம் பாடியருளிய ஸ்தலம்.

## 198 பாதாளீச்சுரம்:

இது பாமணி யென வழங்கி வருகிறது; ராஜமன்னார் கோயிலுக்கு வடக்கு 1½ - மைல். பாதை நன்றாயிருக்கவில்லை.

பதஞ்சலிபோல் பாம்புருவுள்ள தனஞ்சயருஷி பூசித்தஸ்தலம்.

## 199. திருப்பாதிரிப்புலியூர்:

ரெயில் ஸ்டேஷன். கூடலூருக்கு வடக்கே 3-மைல் தூரம். கெடில நதியின்தென்கரையி லிருக்கிறது.

வியாக்கிரபாதர் பூசித்தமையின் இது வடபுலியூர் எனவும் சொல்லப்படும். முடக்காலுள்ள முயல் ருபத்தைச்சாபத்தினற்

பெற்ற மங்கணர் என்னும் முனிவர் அவ்வுரு நீங்கப்பெற்ற ஸ்தலம். இதனைப் பாதிரிப்புலியூர்ப்புராணத்திலும், "முன்னநின்றமுடக் கால்முயற்கருள் செய்துநீள், புன்னைநின்றுகமழ் பாதிரிப்புலி யூருளான்" என்னுந் தேவாரத்திலுங் காண்க. திருநாவுக்கரசு நாய னாரைச் சமணர்கள் கற்றூணிற் கட்டிக் கடலிற்றள்ளிவிட, அவர் "சொற்றுணைவேதியன்" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தை யோதிக் கரையேறப்பெற்ற ஸ்தலம். அந்த இடம் 'கரையேற விட்ட குப்பம்' என்று நாளைக்கும் சொல்லப்படுகிறது. நாயனார், கரையேறின் பின்பு வந்து "ஈன்றாளுமாய்" என்னும் பதிகம்பாடிச் சுவாமியைத் துதித்து சிலநாள் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

## 200. திருப்பாம்புரம்:

பேரளம் ஸ்டேஷனி லிறங்கி மேற்கே 4½-மைல் சென்றால் இத் தலத்தை அடையலாம். வழியில் மீயச்சூர் 1-மைலிலிருக்கிறது.

நாகராஜன் பூஜை செய்த ஸ்தலம். கோயில் சிலமாயிருக்கிறது.

## 201. திருப்பாலைத்துறை:

கும்பகோணத்துக்குத் தெற்கே உள்ள பாபநாசம் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 1-மைல்.

தாருகாவனருஷிகள் அனுப்பிய புலியை யுரித்துச் சிவபெரு மான் தரித்தருளிய ஸ்தலம்.

## 202. திருப்பாற்றுறை:

திரு ஆனைக்காவிலிருந்து கிழக்கே 5-மைல். மார்க்கண்டருஷி பூசிக்கும்போது அபிஷேகத்துக்கும் பசும்பால்கிடையாமல் வரு ந்த, சிவபெருமான் பால்பெருகும்படி அநுக்கிரகித்த ஸ்தலம்.

## 203. திருப்புகலூர்:

நன்னிலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 4-மைல் சென் றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். சாதாரணமான பாதை.

திருநாவுக்கரசுநாயனார் முத்திபெற்ற ஸ்தலம். திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம் இவ்வாலயத்துக்குள் இருக்கிறது. சுவாமிக் குப் பலவித புஷ்பமாலை கட்டிக்கொடுக்கும் திருத்தொண்டுசெய்து வந்த முருகநாயனாருடைய ஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனார் நித்திரை செய்யும்போது தலையின்கீழ் வைத்துக்கொண்டிருந்தசெங்கற்களெல்

லாம் பொன்கற்களா யிருக்கக்கண்டு 'தம்மையே புகழ்ந்திச்சைபேசி னும்' என்னுந் திருப்பதிகம்பாடி, சுவாமியைத் துதிசெய்த ஸ்தலம்.

இத்தலத்துத் தேவாரத்தில், 'புன்னைப் பொழிற்புகலூரண்ணல் செய்வன கேண்மின்களோ', 'புன்னைத் தாது பொழிற்புக லூரரே' என்பனவயால் ஸ்தலவிருக்ஷம் புன்னை என்பதும், 'கரநாலைந் துடைத், தோணற் பிரானை வலிதொலைத் தோன்றொல்லை நீர்ப்புகலூர்க், கோணப்பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே' என்பதனாற் சுவாமிபெயர் கோணப்பிரான் என்பதும், 'பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக், கருந்தாழ் குழலியும் தாமுங் கலந்து' என்பதனால் தேவியார் பெயர் கருந்தாழ்குழலி என்பதும், வர்த்தமானீச்சுரத் துப் பதிகத்தில் "தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்த மும் புகையுங், கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்" என்பதனால் முருகநாயனாருடைய திருப்பணியின் சிறப்பு இத்தன்மைத்து என்பதும் புலப்படுகின்றன.

204. திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம்:

இவ்வாலயம் திருப்புகலூர் ஆலயத்துக்குள் வடபுறத்திலிருக் கிறது. (திருப்புகலூருக்குச் சொல்லியிருப்பதைப் பார்க்க.)

205. திருப்புத்தூர்:

மதுரைக்குக்கிழக்கே 27-மைலிலுள்ள சிவகங்கை என்னும் ஊரைச்சேர்ந்து, அங்கிருந்து வடக்கே $16\frac{1}{2}$-மைல் சென்று, திருக் கோஷ்டியூர் என்னும் விஷ்ணு க்ஷேத்திரத்தை அடைந்து, அங்கிரு ந்து வடக்கே $5\frac{1}{2}$-மைல் சென்றால் திருப்புத்தூரை அடையலாம்.

மானாமதுரை ரெயில் ஸ்டேஷனுக்கு வடக்கு 11-மைலில் சிவ கங்கை இருக்கிறது. திருப்புத்தூருக்கு வடமேற்கு 15-மைலில் பிரான்மலை என்று வழங்கும்கொடுங்குன்றமும், திருப்புத்தூருக்குக் கிழக்கு 7-மைலில் குன்றக்குடி என்னும் சுப்பிரமண்ய சுவாமி க்ஷேத்திரமும் இருக்கின்றன.

ஸ்தலவிருக்ஷம் - கொன்றை. வயிரவர் சந்நிதிவிசேஷம். லக்ஷ்மி பூசைசெய்த ஸ்தலம்.

206. திருப்புள்ளமங்கை என்பது பசுபதிகோயில்.

தஞ்சாவூருக்கு வடகிழக்கு 11-மைலிலுள்ள ஐயம்பேட்டை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி மேற்கே $\frac{1}{2}$-மைல்சென்று சக்கரப்பள்ளி

யென்னும் ஸ்தலத்தைச்சேர்ந்து அங்கிருந்து பின்னும் 1½-மைல் மேற்கே சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

∴ தேவர்கள் அமுதம் கடைந்தபோது உண்டான விஷத்தைப் பரமசிவன் உண்டு திருமிடற்றில் அடக்கியருளிய ஸ்தலம்.

207. புள்ளிருக்குவேளூர் என்பது வைத்தீசுரன் கோயில்.

ரெயில் ஸ்டேஷன்; சீகாழிக்குத் தென்மேற்கு 3½-மைல்.

சம்பாதி-ஜடாயு, இருக்குவேதம், முருகக்கடவுள், சூரியன் இவர்கள் பூசித்த ஸ்தலம். இந்தத் தல ஆலயத்துக்குள் இருக்கும் முத்துக் குமாரசுவாமி சந்நிதி மிகப்பிரபலமானது. கிருத்திகை தினங்களில் அடியார்கள் திரளாய்ச்செல்கிறார்கள்.

208. திருப்புறம்பயம்:

கும்பகோணத்துக்கு வடமேற்கு 4-மைலிலுள்ள திரு இன்னம்பர் என்னும் ஸ்தலத்தை அடைந்து அங்கிருந்து வடக்கே சுமார் 2-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

பிரளயத்துக்குப் புறம்பாய் இருந்தமையால் புறம்பயம் என்று பெயர் உண்டாயிற்று; (புறம்பு+அயம்=நீர்). ஓர் வணிக கன்னிகைக்குக் குறித்திருந்த புருஷன் பாம்பு கடித்து இறக்க, அவனைத் திருஞானசம்பந்தசுவாமிகள் எழுப்பி யருளிய ஸ்தலம்.

209. புறவார்பனங்காட்டூர் என்பது பனையபுரம்.

விழுப்புரம் ஸ்டேஷனுக்கு வடக்கே 5½-மைல். நல்ல வழி.

இந்த ஸ்தலத்திலே பிரதி வருஷமும் சித்திரைமீ முதல் தேதி முதல் ஏழாந்தேதி வரையில் ஒவ்வொரு நாள் காலையிலும் சூரியன் உதயமாகும்போது அதன் கிரணம் முதலில் சுவாமி மேலும் பின்பு தேவியார் மேலும் விழுகின்றது.

சுவாமி, சிபிச்சக்கரவர்த்திக்குத் தரிசனங்கொடுத்தருளிய ஸ்தலம்.

210. திருப்புனவாசல்:

திருஆடானை என்னும் ஸ்தலத்திலிருந்து வடக்கே 12-மைல். மதுரைக்குக் கிழக்கே 30-மைல் தூரத்திலுள்ள மானமதுரை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, அங்கிருந்து வடக்கே 11-மைல் சென்று சிவகங்கை என்னும் ஊரை அடைந்து, அங்கிருந்து கிழக்கே 11-மைல் சென்று காளையார் கோயில் என வழங்கும் திருக்கானப்பேர் க்ஷேத்திரத்தைச் சேர்ந்து, அங்கிருந்து 21-மைல் கிழக்கே

சென்று திருஆடானை என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து 12-மைல் தூரம் வடக்கே சென்றால் திருப்புனவாசலை அடையலாம்.

நான்கு வேதங்களும் பூசித்த ஸ்தலம். நந்தியும் மூலலிங்கமும் ஆவிடையாரும் அதிக பெரிதாய் இருக்கின்றன.

திருப்புனவாசலுக்கு வடக்கு 15-மைலில் திருப்பெருந்துறை என்னும் க்ஷேத்திரம் இருக்கிறது.

211. திருப்புன்கூர்:

வைத்தீசுரன்கோயில் ரெயில் ஸ்டேஷனுக்கு மேற்கு 2-மைல்.

திருநாளைப்போவார் தம்மை நேரே தரிசித்து வணங்கும் பொருட்டு, சுவாமி தமக்கு முன்னிருந்த நந்திதேவரைச் சற்று விலகி யிருக்கும்படி செய்தருளிய ஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனாரும் ஏயர்கோன் கலிக்காம நாயனாரும் நண்புள்ளவர்களான பின்பு இருவருமாகச் சென்று வணங்கிய ஸ்தலம். கலிக்காம நாயனார் அநேகந் திருப்பணிகள் செய்த ஸ்தலம். கலிக்காமநாயனார்பொருட்டுச் சிவபெருமான் ஈராறுவேலி இருமுறைகொண்டு மழையின்றி உயிர்கள் வருந்திய காலத்து மழை பெய்வித்து உலகை உய்வித்த ஸ்தலம். இவ்வுண்மை இத்தலத்துத் தேவாரப்பதிகத்தில் "வையக முற்றும்" என்னும் இரண்டாவது செய்யுளானும், "ஏத நன்னில மீராறு வேலி யேயர்கோன்" என மூன்றாம் செய்யுளில் உள்ள அடைமொழியானும், கோயிற் றிருப்பண்ணியர் விருத்தத்தில்—

" பொன்னம் பலத்துறை புண்ணிய னென்பர் புயன்மறந்த
கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்று புன்கூர்
மன்னு மழைபொழிந் தீராறு வேலிகொண் டாங்கவற்கே
பின்னும் பிழைதவிர்த் தீராறு வேலிகொள் பிஞ்ஞகனே"

என நம்பியாண்டார்நம்பி கூறுதலானும் நன்கு விளங்கும்.

கலிக்காமநாயனாருடைய வாசஸ்தானமாகிய திருப்பெருமங்கலம் திருப்புன்கூருக்குச் சமீபத்தி லிருக்கிறது.

212. திருப்பூந்துருத்தி:

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் வழியில் 6-மைல் சென்று திருக்கண்டியூரை அடைந்து, அங்கிருந்து மேற்கே 2-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்கு வடக்கு 1-மைலில் திருநெய்த்தானம் இருக்கிறது.

அப்பர்சுவாமிகள் ஒரு திருமடங்கட்டுவித்து பலவகைத்திருத் தாண்டகங்களும் திருஅங்கமாலே முதலிய திருப்பதிகங்களும் பாடிக் கொண்டிருந்த ஸ்தலம். பாண்டிநாட்டுக்குச் சென்று சமணரை வென்று திரும்பிவந்த திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், அப்பர் சுவாமிகள் இத்திருத்தலேக் கேள்வியுற்றுவந்து அவருடன்சிலகாலம் இருந்தருளிய திருப்பதி. சப்தஸ்தானங்களில் ௬-ஆவது ஸ்தலம்.

## 213. திருப்பூவணம்:

ரெயில் ஸ்டேஷன். மதுரைக்குக் கிழக்கு 12-மைல் தூரம்.

பொன்னனேயாள் என்னுந் தாசிக்காக சுவாமி சித்தராயெழுந் தருளி வந்து, ரசவாதஞ் செய்துகொடுத்த அப்பொன்னேக்கொண்டு அவள் சுவாமியின் திருவுருவஞ்செய்வித்து மகிழ்ந்த ஸ்தலம். தமிழ்நாட்டு மூவேந்தராகிய 'தென்னர் சேரர் சோழர்' ஆகிய இவர்கள் பூசித்து வணங்கின ஸ்தலம்.

## 214. திருப்பூவனூர்:

தஞ்சாவூருக்குக் கிழக்கே 18½-மைலிலுள்ள நீடாமங்கலம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, தென்மேற்காய் இராஜமன்னர் கோயி லுக்குப் போகும்வழியில் 2-மைல் சென்று பாமணி என்னும் ஆற் றைக்கடந்தால்,இந்தத் தலத்தை அடையலாம்; இது பாமணி ஆற் றின் மேற்கரையில் இருக்கிறது.

சுகமுனி முதலாயினோர் புஷ்பவனம் வைத்து சுவாமியைப் பூசித்து முத்திபெற்ற ஸ்தலம்.

## 215 பெண்ணுகடம்: (திருக்கடந்தை நகர்)

விருத்தாசலத்துக்குத் தென்மேற்கு 11-மைல். நல்ல பாதை. திருமுதுகுன்றத்துக்குச் சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க.

தேவகன்னியர், காமதேனு, வெள்ளேயானே இவர்கள் பூசித்த படியாற் பெண்ணுகடம் என்றபெயர் வந்தது. இந்தத்தலத்திலுள்ள ஆலயத்துக்குத் தூங்கானே மாடம் என்று பெயர்.

கலிக்கம்பநாயனருடைய ஸ்தலம். அப்பர்சுவாமிகள் "பொன் னர் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" என்னுந் திருப்பதிகம் பாடித் தம்முடையதோளின்மேற் சூலக்குறியும் இடபக்குறியும் பொறித்தருளப்பெற்ற ஸ்தலம்.

216. திருப்பெரும்புலியூர்:

திருவையாற்றுக்கு மேற்கே 2½-மைல். வழியில் 1-மைல் தூரத்தில் திருநெய்த்தான மிருக்கிறது.

வியாக்கிரபாதருஷி பூசித்த ஸ்தலம்.

217. பெருவேளூர் என்பது காட்டூர் ஐயன்பேட்டை.

தலையாலங்காட்டிலிருந்து கிழக்கு 3-மைல். திருவாரூரிலிருந்து மேற்கே 7-மைல் தூரமுள்ள திருக்கரவீரம் அல்லது கரையபுரம் என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து வடமேற்கு 1½-மைல் சென்றால், பெருவேளூர் என்னும் ஐயம்பேட்டையை யடையலாம்.

கௌதமருஷி முதலியோர் பூசித்த ஸ்தலம்.

218. பேணுபெருந்துறை:

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு 6½-மைல் அல்லது 7-மைல் தூரம். திருநறையூருக்குக் கிழக்கு 1-மைல்.

சிவசத்தி, பிரமா முதலியோர் பூசித்த ஸ்தலம்.

219. பேரெயில்:

இஃது ஓகைப்பேரையூர் என வழங்கிவருகிறது.

திருவாரூருக்கு மேற்கிலுள்ள குழிக்கரை ஸ்டேஷனிலிறங்கி தெற்கே வயல் வழியே சுமார் 3-மைல் சென்றால் இந்த ஸ்தல மிருக்கிறது. வண்டி பாதையே சென்றால் 6-மைல் தூரமிருக்கும்.

நாட்டியத்தான்குடி ரெயில் ஸ்டேஷனி லிறங்கி, மேற்கே 5-மைல் சென்று வடபாதிமங்கலம் என்னும் ஊரைச் சேர்ந்து, அங்கிருந்து வடக்கே ஒருமைல் சென்றாலும் பேரெயில் என்னும் ஸ்தலத்தை அடையலாம். செம்மையான பாதையில்லை.

கோயில் சிறிது. சபாபதி விக்கிரகம் வெகு அழகாயிருக்கிறது.

220. திருப்பைஞ்ஞீலி. ~~என்பது லாலிகுடி~~.

திரிசிராப்பள்ளியி லிருந்து வடக்கே 4-மைல் சென்று கொள்ளிடத்தைக் கடந்து 8-மைல் கிழக்கே சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். கொள்ளிடத்துக்குப் பாலங்கட்டி யிருக்கிறது.

பசியினால் வருத்தமுற்றுவந்த அப்பர் சுவாமிகளுக்குச் சிவபெருமான் கட்டமுது கொடுத்தருளிய தடாகமுந் தோட்டமும் இந்தத் தலத்துக்குத் தெற்கே ¾-மைல் தூரத்திலிருக்கிறது.

221. திருமங்கலக்குடி:

திருவிடைமருதூர் ரெயில் ஸ்டேஷனி லிருந்து வடகிழக்கு $3\frac{1}{2}$-மைல். வழியில் $2\frac{1}{2}$-மைலில் தென்குரங்காடுதுறையிருக்கிறது.

மாகாளி, சூரியன், விஷ்ணு, பிரமன், அகஸ்தியர் இவர்கள் பூசித்த ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசு நாயனார், தேவாரத்தில்,

"மங்க லக்குடி யீசனை மாகாளி
வெங்கதிர்ச் செல்வன் விண்ணொடு மண்ணுநேர்
சங்கு சக்கர தாரி சதுமுக
னங்க கத்திய னும்மர்ச்சித் தாரன்றே."

என்று கூறி யிருத்தலால் அறிக.

அரசனிடத்தில் தண்டலாளரா யிருந்த சிவபக்தர் ஒருவர் அரசனுடைய பணத்தைக்கொண்டு ஆலயத் திருப்பணி செய்ததை அரசன் தெரிந்து அவரை அழைப்பிக்க, அவர் அரசனது ஆக்ஞைக்குப் பயந்து உயிர் துறந்துவிட்டார்; அரசன் அவருடைய சரீரத்தைத் திருமங்கலக்குடிக்கு அப்பாற் கொண்டுபோகும்படி கட்டளையிட்டு அந்த சரீரம் திருவியலூருக்குவர, அத்தண்டலாளருடைய மனைவியாரின் வேண்டுகோளால் திருமங்கலக்குடியில் வீற்றிருந்தருளும் மங்களநாயகியாரின் திருவருளால் அவர் உயிர்த்தெழுந்தார்.

222. திருமணஞ்சேரி:

மாயூரத்துக்கடுத்த குற்றாலம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து வடகிழக்கே $\frac{3}{4}$-மைல் சென்று திருத்துருத்தி என்கிற குற்றாலத்தை அடைந்து, அங்கிருந்து வடகிழக்கே 2-மைல்சென்று திருவேள்விக்குடியை அடைந்து, அங்கிருந்து வடக்கே $1\frac{1}{2}$-மைல் சென்று எதிர்கொள்பாடி என்னும் ஸ்தலத்தை அடைந்து, அதிலிருந்து கிழக்கே $\frac{1}{4}$-மைல்சென்றால் திருமணஞ்சேரியைச்சேரலாம்.

மன்மதன் பூசித்த ஸ்தலம்.

வைசியகுலத்திற் பிறந்த நங்கைமாத்திகளிருவரும் ஒருங்கே கருப்பமுற்றபோது, பிறக்கும் குழந்தைகளை ஒருவர்க்கொருவர் சம்பந்தஞ்செய்து கொள்ளுகிறதென்று உறுதி செய்துகொண்டார்கள். பின்பு ஒருத்தி பெற்றது ஆமையாயிருந்தபடியால் மற்றவள் தன் பெண்ணைக்கொடேனென்று சொன்னாள். அந்த ஆமை சிவ

பெருமானைப்பூசித்து, அவரால், குறித்தபெண்ணை மணஞ்செய்யப் பெற்று, ஆமையுருநீங்கி மானிடவுருவம் இத்தலத்தில்பெற்றது.

223. திருமண்ணிப்படிக்கரை என்பது இலுப்பைப்பட்டு.

வைத்தீசுரன்கோயில் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி மேற்கே 2-மைல்சென்று திருப்புன்கூரை அடைந்து, மறுபடி மேற்கே 3-மைல் சென்று திருவாளொளிபுற்றூரைச்சேர்ந்து, அங்கிருந்து மேற்கே 1-மைல் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம்.

சிவபெருமான் ஆலகால விஷத்தை யருந்தியபோது, உமாதேவியார் அவருடைய கண்டத்தைப்பிடிக்க, அவ்விஷக்கறையை சிவபெருமான் கண்டத்திற் காட்டியருளிய ஸ்தலம்.

224. திருமயிலாடுதுறை என்பது மாயூரம்.

ரெயில்ஸ்டேஷன். காவிரியின் தென்கரையி லிருக்கிறது.

பார்வதிதேவியார் மயிலாயிருந்து சிவபெருமானைப் பூசித்த ஸ்தலம். இந்த க்ஷேத்திரத்திற் காவிரிநதியில் துலாமாசமாகிய ஐப்பசிமாதத்தில் செய்யும் ஸ்நானம் மிகவும் விசேஷம்.

225. மயிலாப்பூர்:

சென்னபட்டணத்துக்குத் தெற்கே 4-மைல் தூரம்.

பார்வதிதேவியார் மயிலாயிருந்து பூசித்த ஸ்தலம். வாயிலார் நாயனார் திருவவதாரஞ் செய்த ஸ்தலம். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பூம்பாவைத்திருப்பதிகம்பாடி, அரவுகடித்து இறந்துதகனமாய்ச் சாம்பலும்எலும்புமாயிருந்த (சிவநேசசெட்டியாருடைய) அருமைப் புதல்வியை உயிர்ப்பித்த ஸ்தலம்.

உயர்வொப்பில்லாத திருக்குறளைச் செய்தருளிய தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

226 திருமயேந்திரப்பள்ளி:

சிதம்பரத்துக்குத் தெற்கே 4½-மைல் தூரத்திலுள்ள ஆனைக்காரன்சாவடி என்னும் ஸ்டேஷனி லிறங்கி அங்கிருந்து கிழக்கே 3-மைல் சென்று ஆச்சாபுரத்தை அடைந்து,அப்பால் வடகிழக்கில் 4-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சந்திரன், சூரியன், அயன், இந்திரன்,ஆகியஇவர்கள் வழிபட்ட ஸ்தலம். "சந்திரன் கதிரவன் தகுபுக ழயனொடும், இந்திரன் வழிபட இருந்தவெம் மிறையவன்". (தேவாரம்.)

227. திருமருகல்:

நன்னிலம் ரெயில்ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 4 - மைல் சென்று திருப்புகலூரையடைந்து, அங்கிருந்து தென்கிழக்கே 3½-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்கு வடகிழக்கு 1-மைலில் சாத்தமங்கை என்னும் ஸ்தலம் இருக்கின்றது.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் விஷம் தீண்டி யிறந்த செட்டிப்பிள்ளையை உயிர்ப்பித்த ஸ்தலம்.

228. திருமழபாடி:

திருவையாற்றுக்கு மேற்கு 1-மைல் தூரத்திலுள்ள திருநெய்த்தானத்திலிருந்து வடமேற்கு 2-மைல் தூரம்.

தேவேந்திரன் பூசித்த ஸ்தலம்.

229. திருமறைக்காடு என்பது வேதாரணியம்.

நாகபட்டினத்துக்குத் தெற்கு 30-மைல். சாதாரணமான பாதை. திருத்தருப்பூண்டி ரெயில் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கு 22-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதுவும் சாதாரணமான பாதை.

சப்த விடங்கஸ்தலங்களிலொன்று. வேதங்கள் பூசித்துத் திருக்காப்புச்செய்த கதவைத் திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும்முறையே திறக்கவும்அடைக்கவும் பாடியருளிய ஸ்தலம். சேரமான் பெருமாணயனர் சுந்தரமூர்த்தி நாயனருடன் சென்று சுவாமி தரிசனஞ் செய்து பணிந்த ஸ்தலம்.

ஆலயத்துள்ள தீப நெய்யை ஓர் எலி வந்து உண்ணும் போது அச்சுடர் அதன்மூக்கிற் பட்டது. அப்போது எலி தன் மூக்கைஎடுத்துக்கொள்ள தீபம் பிரகாசமா யெரிந்தது. தீபம் மங்கும்படியான சமயத்து எலி யிப்படிச்செய்தமையாற் சுவாமி அதற்கு மூவுலகும் ஆளும்படி பேரருள்புரிந்தார். அதன்படி அவ்வெலி மறுபிறப்பில் மாவலிச் சக்ரவர்த்தியாய்ப் பிறந்து அரசாண்டது. இதனை அப்பர்சுவாமிகள் திருக்குறுக்கைக்கு அருளிச்செய்த திருநேரிசையில் எட்டாவதுசெய்யுளில்,

"நிறைமறைக் காடு தன்னி னீண்டெரி தீபந் தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட

நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவா னுலக மெல்லாங்
குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே."
என்று சிறப்பித்திருக்கிறார்.

230. மாகறல்:

காஞ்சிபுரத்துக்குத் தெற்கே 10-மைல். சாதாரணமானபாதை. வழியில் வேகவதி ஆற்றையும் பாலாற்றையும் கடக்கவேண்டும்.

இந்த ஸ்தலத்துக்குத் தெற்கே ⅞-மைலிற் சேயாறு ஓடுகிறது.

தேவேந்திரன் பூசித்த ஸ்தலம்.

231. திருமாணிகுழி:

திருப்பாதிரிப்புலியூர் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி, அங்கிருந்து மேற்கே 2½-மைல்சென்று 'திருவஹீந்திரபுரம்' என்னும் விஷ்ணு க்ஷேத்திரத்தை யடைந்து, அங்குள்ள பெருமாள்கோயிலின் தென்புறத்திலிருக்கும் கேபுர்மலை யோரமாகச் செல்லும் கொடிவழியே 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

விஷ்ணு வாமனவதாரஞ் செய்தபோது சிவபெருமானைப் பூசித்த ஸ்தலம். இது 'நித்தநிய மத்தொழில னாகிநெடு மால்குறளனாகிமிகவுஞ், சித்தமதொ ருக்கிவழி பாடுசெய நின்றசிவ லோகனிடமாம்' என்னுந் தேவாரத்தா லறியலாகும்.

232. திருமாந்துறை:

திரிசிராப்பள்ளி மலையிலிருந்து வடக்கே 3-மைல் சென்று திருஆனைக்கா என்னும் ஸ்தலத்தை அடைந்து அங்கிருந்து வடகிழக்கே 10-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

கண்ணுவமுநிவர் பூசித்த ஸ்தலம்.

இதற்குக் கிழக்கு 6-மைலில் அன்பிலாலந்துறையும், தென்மேற்கே 4-மைலில் திருப்பாற்றுறையும் இருக்கின்றன.

233. திருமாற்பேறு:

காஞ்சிபுரத்திலிருந்து ரெயில் மார்க்கமாய் வடக்கே பளூர் வரையில் (9-மைல் தூரம்) சென்று, அங்கிருந்து தென்மேற்காய் 2½-மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். இந்த இரண்டரை மைல் தூரமும் வண்டி சாதாரணமாய்ப்போகும்.

காஞ்சிபுரத்திலிருந்து வடமேற்காய் கொடிவழியே சென்றால் திருமாற்பேறு 7-மைல் தூரந்தானிருக்கும். ஆனால் இந்தவழி மழைகாலத்தில் மெத்த சங்கடமாயிருக்கும்.

ஸமஸ்கிருதத்தில் இந்தத் தலத்துக்கு 'ஹரிச்சக்ரபுரம்' என்று பெயர். குபன் என்னும் அரசன்பொருட்டு மகாவிஷ்ணு ததிசி முநிவருடன் போர்செய்யத், தமது சக்கரம் அம்முநிவருடைய வஜ்ர சரீரத்திற்பட்டு வாய் மடிந்துவிட்டபடியால் வேறு சக்கரம் பெறயோசித்து, சலந்தரனைக்கொன்ற சக்கரம் சிவபெருமானிடத்தி லிருப்பதை யறிந்து, அதைப் பெறும் பொருட்டு விஷ்ணுமூர்த்தி இந்தத் தலத்துக்கு வந்து சிவபெருமானைப் பிரதிதினமும் ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டு அர்ச்சித்து வந்தார். பரமசிவன் அவருடைய பக்தியின் திறத்தைக் காணும்பொருட்டு ஒருநாள் ஒரு மலரை மறைத்தருள, மகாவிஷ்ணு சஹஸ்ரநாம அர்ச்சனை செய்யும்போது ஒரு திருநாமத்துக்குத் தாமரைமலர் குறைவுபடுதலைக் கண்டுவருந்தி, தமது கண்ணையே யிடந்துசாத்தி பூஜையை நிறைவேற்றினர். அப்போது பரமசிவன் பிரசன்னமாகி மகாவிஷ்ணுவுக்கு, கண்ணையிடந்து அர்ச்சித்த காரணத்தினால் 'பதுமாக்ஷன்' என்னும் பெயரையும், 'சுதரிசனம்' என்னும் சக்கரத்தையுங் கொடுத்தருளி, இந்தத் தலத்தில் ஒரு க்ஷணப்பொழுது வதிந்தவர்க்கும் முத்தியளிக்கவேண்டும் என்று மகாவிஷ்ணு கேட்டுக்கொண்டபடி அநுக்கிரகமுஞ்செய்து,மறைந்தருளினர். 'கருமாற்கின்னருள் செய்தவன் காண்டகு,திருமாற்பேறு தொழுவினை தேயுமே.' (தேவாரம்.)

## 234. திருமீயச்சூர்:

பேரளம் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி மேற்கே 1-மைல் சென்றால் இந்தஸ்தலத்தை அடையலாம்.

சூரியன் பூசித்த ஸ்தலம். சூரியன் சுவாமியையும் தேவியாரையும் யானைமேல்வைத்துப் பூஜைசெய்தானும். கோயில் விமானம் யானை உட்கார்ந்திருப்பதுபோலிருக்கிறது. தேவியாரும் உட்கார்ந்தவண்ணமாயிருக்கிறார். வில்வவிருக்ஷம். சூரியபுஷ்கரணி.

## 235. திருமீயச்சூர் இளங்கோயில்:

இது சிறுஆலயம். மீயச்சூர் ஆலயத்திலுள்ள சுவாமி சந்நிதிக்குப் பக்கத்தில் வடபுறமாயிருக்கிறது. காளி பூசித்த ஸ்தலம்.

236. திருமுண்டீச்சுரம் என்பது கிராமம்.

திருவெண்ணெய்நல்லூருக்குக் கிழக்கு 3-மைல்.

பிரமாவும் தேவேந்திரனும் பூசித்த ஸ்தலம்.

237. திருமுதுகுன்றம் என்பது விருத்தாசலம்.

கூடலூருக்குத் தென்மேற்கு 35-மைல் தூரம். நல்ல வழி. மத்தியில் குறிஞ்சிப்பாடி யென்னும் ஊர் இருக்கிறது.

விருத்தகாசி யென்று சொல்லப்படும் விசேஷமான ஸ்தலம். இங்கு உயிர்விடும் பிராணிகளுக்கெல்லாம் பார்வதிதேவியார் தமது வஸ்திரத்தினால் வீசி இளைப்பாற்ற, சிவபெருமான் பஞ்சாக்ஷரோபதேசஞ் செய்து அப்பிராணிகளைத் தமது ரூபமாக்கும் அரும்பதியாதலாற், காசியினுஞ் சிறந்தது. இச்சிறப்பைக் கந்தபுராணம் வழிநடைப் படலத்தில்,

"தூசினா லம்மை வீசித் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சு
மாசிலா வுயிர்கட் கெல்லா மஞ்செழுத் தியல்பு கூறி
யீசனே தனது கோல மீந்திடு மியல்பா லந்தக்
காசியின் விழுமி தான முதுகுன்ற வரையுங் கண்டான்"

எனக் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் கூறியிருக்கின்றார்.

238. திருமுருகன்பூண்டி:

ஈரோட்டிலிருந்து ரெயில்வழியாய் மேற்கே திருப்பூர் வரையில் 32-மைல் சென்று அந்த ஸ்டேஷனிலிறங்கி வடக்கே அவிநாசிக்குப் போம்வழியில் 5-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

முருகக்கடவுள் பூசித்த ஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனார், சேரமான் பெருமானாயனார் கொடுத்த திரவியங்களை யெடுப்பித்துக்கொண்டு திருவாரூருக்குச் செல்லுகையில் சுவாமி பூதர்களை வேடர்களாக்கி அனுப்பி அத் திரவியங்களைப் பறிக்கச்செய்து, பின்பு நாயனார் பதிகம்பாடித் துதிக்க, அவைகளை மீட்டும் கொடுத்தருளிய ஸ்தலம்.

239 வடதிருமுல்லைவாயில்:

சென்னபட்டணத்துக்கு மேற்கே 13-மைலிலுள்ள ஆவடி ரெயில் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து வடகிழக்கே 2½-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். சாதாரணமான பாதை.

சுவாமி சந்நிதியில் எருக்கந்தூண்கள் இரண்டு வைக்கப்பட்டிருக்கின்றன. சுப்பிரமணியசுவாமி பூசித்த ஸ்தலம். தொண்டைமான் சக்கரவர்த்தி அநுக்ரகம் பெற்ற திருப்பதி. இவ்விஷயம்

"சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாற் கட்டிட்
டெல்லையி லின்பம் அவன்பெற வெளிப்பட்
டருளிய இறைவனே யென்று
நல்லவர் பரவுந் திருமுல்லை வாயில் நாதனே
நரைவிடை யேறீ
பல்கலைப் பொருளே படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே".

என்னும் தேவாரச் செய்யுளினால் அறியலாகும்.

240. தென்திருமுல்லைவாயில்:

சீகாழிக்குக் கிழக்கு 5-மைல்; நல்லவழி. இது கடலோரத்திலிருக்கிறது.

தேவேந்திரனும் சுதர்மனும் பூசித்த ஸ்தலம்.

241. திருமூக்கீச்சுரம் என்பது உறையூர்.

திரிசிராப்பள்ளிக்கு மேற்கு ஒரு மைல் தூரத்திலிருக்கிறது. பிரமா வந்து பூசிக்கும்போது சிவபெருமான் வேலைக்கொரு வர்ணமாக விற்றிருக்கக்கண்டு அவருக்குப் பஞ்சவர்ணநாதேசுரர் என்று பெயர் கொடுத்த ஸ்தலம். புகழ்ச்சோழநாயனாருடைய ஸ்தலம்.

242. திருவக்கரை:

விழுப்புரம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடக்கே $5\frac{1}{2}$-மைல் சென்று புறவார் பனங்காட்டூர் என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து கிழக்கே 8-மைல் சென்று கூனிச்சம்பட்டு என்னும் கிராமத்தை அடைந்து, அங்கே வடக்கே திரும்பி 1-மைல் சென்று கொடுக்கூர் ஆற்றைக் கடந்து, அப்பால் $\frac{1}{2}$-மைல் சென்றால் திருவக்கரையை அடையலாம். விழுப்புரத்திலிருந்து கூனிச்சம்பட்டுவரையில் $13\frac{1}{2}$-மைல்; செம்மையான பாதையிருக்கிறது. கூனிச்சம்பட்டிலிருந்து திருவக்கரை வரையில் $1\frac{1}{2}$-மைல்; சாதாரணவழி.

வக்கிராசூரன் பூசித்த ஸ்தலம்.

243. வடுகூர்:

புதுச்சேரிக்கு மேற்கே 10-மைலிலுள்ள கண்டமங்கலம் என்னும் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி மேற்கே 2-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இதற்கு ஆண்டார் கோயில் என்று பெயர் வழங்குகிறது.

வடுகனாகிய வைரவர் பூசித்த ஸ்தலம்.

இந்த ஸ்தலத்துக்குத் தென்மேற்கு 1-மைல் தூரத்தில் திருத்துறையூர் இருக்கிறது.

244. திருவலஞ்சுழி:

கும்பகோணத்துக்கு மேற்கே 4-மைல் தூரம். நல்ல பாதை.

காவிரிநதியானது ஆதியில் இந்த இடத்தில் வலமாகச்சுழித்துப் பாதலத்திற் சென்றமையால் இந்தத் தலத்துக்குத் திருவலஞ்சுழியென்னும் பெயர் உண்டாயிற்று. தேவேந்திரன் பூசித்த ஸ்தலம்.

245. திருவலம்புரம் என்பது பெரும்பள்ளம்.

சீகாழியிலிருந்து தென்கிழக்காய் காவிரிப்பூம்பட்டினத்துக்குப் போகும் வழியில் 7-மைல் சென்று திருவெண்காட்டைச்சேர்ந்து, பின்னும் அந்தவழியில் $1\frac{1}{4}$-மைல் சென்று, அங்கே வழியைவிட்டு மேற்கே $\frac{1}{4}$-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். இதற்குத் தென்மேற்கு $1\frac{1}{4}$-மைலில் தலைச்சங்காடு இருக்கிறது.

விஷ்ணுமூர்த்தி பூசித்து வலம்புரிச் சங்கு பெற்ற ஸ்தலம்.

246. திருவலிதாயம் என்பது பாடி.

சென்னபட்டணத்துக்கு மேற்கு 6-மைலிலுள்ள வில்லிவாக்கம் (கொன்னூர்) ரெயில்ஸ்டேஷனிலிறங்கி தென்மேற்கே கொடிவழியாய் 2-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

பாரத்துவாஜர், பிரஹஸ்பதி, அநுமார் முதலியோர் பூசித்த ஸ்தலம்.

247. வலிவலம்:

திருவாரூருக்குத் தென்கிழக்கு 6-மைல். இதற்கு வடக்கு 2-மைல் தூரத்தில் கன்றாப்பூர் இருக்கிறது.

காரணருஷியும், கரிக்குருவியும் பூசித்த ஸ்தலம்.

248. திருவல்லம்:

இப்போது திருவலம் என்று சொல்லப்படுகிறது.

ரெயில் ஸ்டேஷன். ஆறுகாடு ரெயில் ஸ்டேஷனுக்கு மேற்கே 8-மைல் தூரத்தில், நீவாஎன்னும் நதியின் மேற்கரையிலிருக்கிறது.

நவக்கிரகங்களும் வல்லாளனென்னும் அரசனும் பூசித்த ஸ்தலம்.

249. திருவன்னியூர்:

திருவிழிமிழலைக்கு வடமேற்கு 2-மைல்; சாதாரணபாதை. (திருவிழிமிழலைக்குச் சொல்லியிருக்கும் பாதையைப்பார்க்க.)

அக்கினி பூசித்த ஸ்தலம்.

250. திருவாஞ்சியம்:

நன்னிலம் ரெயில் ஸ்டேஷனுக்கு மேற்கு 6½-மைல். ஸ்டேஷனிலிருந்து போம்போது வழியில் 1½-மைல்தூரத்தில் திருக்கொண்டீச்சுரமும், அப்பால் 1½-மைல் தூரத்தில் நன்னிலமும், அங்கிருந்து 3½-மைல் தூரத்தில் திருவாஞ்சியமும் இருக்கின்றன. வேறுவழி: திருவாரூர் ஸ்டேஷனிலிறங்கி வடமேற்கே கும்பகோணம்போகிற வழியில் 11-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

திருவாஞ்சியம் புத்தாறு என்னும் நதியின் வடகரையிலிருக்கிறது. சந்தன விருக்ஷம், குப்தகங்கை தீர்த்தம்.

விஷ்ணுமூர்த்தி, சிவபெருமானைப் பூசித்துத், தம்மைவிட்டுப் பிரிந்துபோன லக்ஷ்மியை அடைந்த ஸ்தலம். திருவாஞ்சியம் மிகவும் விசேஷமான ஸ்தலம் இங்கு இறப்பவர்களுக்கு யமவாதனையில்லையாம். காசிக்குச் சமானமாகச் சொல்லப்படும் தென்னாட்டுத் தலங்கள் ஆறில் ஒன்று.

251. வாட்போக்கி:

இஃது இரத்தினகிரி என வழங்கிவருகிறது. திரிசிராப்பள்ளிக்கு மேற்கே 20-மைலிலுள்ள குழித்தலைரெயில் ஸ்டேஷனிலிறங்கி வடமேற்கே 5-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

கோயில் மலைமேலிருக்கிறது. வழியில் திருக்கடம்பந்துறையிருக்கிறது. சயந்தன் முதலியோர் பூசித்த ஸ்தலம். ஆரியதேசத்தரசன் மாணிக்கம்வேண்டி ஸ்தலங்கள்தோறும் சென்றும் கிடையாமல் இங்குவர, சிவபெருமான் ஓர் நீர்த்தொட்டியைக்காட்டி

அதைக்காளிரி ஜலத்தினல் நிரப்பும்படிச்சொல்ல, அவ்வாறு செய்தும் அத்தொட்டி நிறையாமலிருக்க, அரசன் கோபங்கொண்டு உடைவாளையுருவி ஓச்ச நினைக்க, சிவபெருமான் அவ்வாளைப் போக்கிவிட்டு இரத்தினத்தைக் காண்பித்தருளினர். அரசன் அதை விரும்பாது விட்டுச் சிவபணிவிடை ஒன்றையேசெய்து முத்திபெற்ற ஸ்தலம்: சிவபெருமான் வாளைப் போக்கிவிட்டபடியால் இந்த ஸ்தலத்துக்குத் திருவாட்போக்கி யென்னும் பெயர் உண்டாயிற்று.

## 252. திருவாய்மூர்:

திருவாரூருக்குத் தென்கிழக்கு 10-மைல். திருக்கோளிலியில் இருந்து தென்கிழக்காய் 3-மைல் சென்றாலும் இந்த க்ஷேத்திரத்தை அடையலாம். சாதாரணபாதை.

திருநாவுக்கரசுநாயனர் வேதாரணியத்திலிருந்தபோது பரமசிவன் அவருக்குத்தோன்றி யருளித் திருவாய்மூருக்கு வரும்படி கட்டளையிட,

"எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாளம் அருளினர்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனர்
அங்கே வாவென்று போனர் அதென்கொலோ."

என்று பாடிக்கொண்டுசெல்ல, அவருக்குப் பின்வந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனரோடு கூடிக்கொண்டு சென்று தரிசித்த ஸ்தலம். சப்தவிடங்க ஸ்தலங்களுள் ஒன்று.

## 253. திருவாளொளிபுற்றூர்:

வைத்தீசுரன்கோயில் ரெயில்ஸ்டேஷனி லிறங்கி மேற்கே 2-மைல் சென்று திருப்புன்கூர் என்னும் ஸ்தலத்தை அடைந்து பின்னும் மேற்கே 3-மைல் சென்றால் இந்தத்தலத்தைஅடையலாம்.

விஷ்ணுமூர்த்தி, மாணிக்கத்தை வைத்துப்பூசித்த ஸ்தலம்.

## 254. திருவான்மியூர்:

சென்னபட்டணத்துக்குத் தெற்கே 5-மைலிலுள்ள சைதாப்பேட்டை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து தென்கிழக்காய் 4-மைல் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். இந்த 4-மைல் தூரமும் செம்மையான பாதையிருக்கிறது.

வான்மீகருஷி பூசித்த ஸ்தலம். கடற்கரை ஓரத்திலிருக்கிறது. சுவாமி பால் நிறமான சுயம்புமூர்த்தி.

255. விஜயமங்கை:

கும்பகோணத்திலிருந்து வடமேற்கு $3\frac{1}{2}$-மைல் சென்று இன்னம்பர் க்ஷேத்திரத்தை யடைந்து, அங்கிருந்து வடக்கே 2-மைல் சென்று திருப்புறம்பயம் என்னும் ஸ்தலத்தைச் சேர்ந்து, அங்கிருந்து மேற்கே $2\frac{1}{2}$-மைல் சென்றால் விஜயமங்கையை அடையலாம்.

விஜயமங்கை சிறுகிராமம்; கோயிலும் சிறிது. விஜயனாகிய அருச்சுனன் தவஞ்செய்து பாசுபதாஸ்திரம் பெற்ற ஸ்தலம். இதை "பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து, வேண்டு நல்வரங் கொள்விஜ யமங்கை" என்னும் அப்பர்சுவாமிகளுடைய திருக்குறுந்தொகையால் அறிக.

விஜயமங்கையிலிருந்து மேற்கே $1\frac{1}{2}$-மைல் சென்றால் திருவைகாவூர் என்னும் ஸ்தலத்தை அடையலாம்.

256. திருவியலூர்:

கும்பகோணத்துக்குக் கிழக்கு 4-மைல்; மண்வழி.

திருமங்கலக்குடியில் திருப்பணிசெய்து இறந்துபோன ஒரு அடியவரை இந்த ஸ்தலத்துக்குக் கொண்டுவரும்போது அவர், மங்கலக்குடிதேவியாருடைய திருவருளால் உயிர்த்தெழுந்தஸ்தலம்.

257. விளநகர்:

மாயூரத்துக்கு கிழக்கு $4\frac{1}{2}$-மைல்; நல்ல வழி.

சுவாமிக்காக, அருள்வித்தன் என்னும் பிராமணன் புஷ்பக்கூடையை யெடுத்துக்கொண்டு ஆற்றில்வரும்போது, வெள்ளம் வந்து அடித்துக்கொண்டு செல்ல, அவ்வேதியன் பூங்கூடையை விடாது சிவபெருமானையே தியானிக்க அவ்வன்புக்கிரங்கி அவனுக்குத் துறைகாட்டிக்கரையேறவிட்டு, ஞானோபதேசஞ்செய்தருளிய ஸ்தலம். இக்காரணத்தாற் சுவாமிக்குத் துறைகாட்டும்வள்ளல் நாதேசுரர் என்னும் பெயர் உண்டாயிற்று. இதனை இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத்தின் ஏழாவது பாசுரமாகிய—

"சொற்றரு மறை பாடினர் சுடர்விடுஞ் சடை முடியினர்.
கற்றருவ் வடங் கையினர் காவிரித் துறை காட்டினர்.

மற்றரு திர டோளினர் மாசில்வெண் பொடிப் பூசினர்
விற்றரு மணி மிடறினர் மேயதுவ் விள நகரதே."

என்பதனலும் அறிக.

258. விளமர்:

திருவாரூருக்குத் தென்மேற்கு 2-மைல்.

பதஞ்சலிமகாமுநிவர் பூசித்த ஸ்தலம்.

259. திருவிற்குடி:

திருவாரூருக்கு வடக்கு $4\frac{1}{2}$-மைலிலுள்ள வெட்டாறு என்னும் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு $3\frac{1}{2}$-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

அஷ்டவீரட்டங்களில்ஒன்று. சலந்தராசுரனைச்சங்கரித்தஸ்தலம்.

260. திருவிற்கோலம் என்பது கூவம்.

சென்னபட்டணத்துக்கு மேற்கே 30-மைல் தூரத்திலுள்ள கடம்பத்தூர் என்னும் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி, தெற்கே புது மாலகரம், பேரம்பாக்கம் என்னும் கிராமங்கள் வழியாய் 6-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். சாதாரண பாதை. மழைகாலத்தில் வண்டி போவது கஷ்டம். இலம்பையங் கோட்டூர் என்னும் ஸ்தலம் இதற்குச் சமீபத்திலிருக்கிறது.

சுவாமி தீண்டாத்திருமேனி. அதிகமழை பெய்கிறதாக இருந்தால் சுவாமிமேல் வெண்மையான வர்ணம் படருகிறதும், யுத்தம் நேரிடுகிறதாக இருந்தால் சிவந்தவர்ணம் படருகிறதுமான அதிசய ஸ்தலம். இவ்வதிசயத்தைப்பற்றித் திருஞானசம்பந்த சுவாமிகளும் தேவாரத்திலே, "ஐயனல் லதிசயன்" என்று அருளிச்செய்திருக்கிறார்.

261. திருவீழிமிழலை:

மாயூரத்துக்கு மேற்கே $5\frac{1}{2}$-மைல் தூரத்திலுள்ள குற்றலம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, தெற்கே 6-மைல் சென்றால் இந்தஸ்தலத்தை அடையலாம். சாதாரண பாதை. மழைகாலத்தில் வண்டி போவதுகஷ்டம். பேரளம் ஸ்டேஷனுக்குத்தென்மேற்கு 8-மைல்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனரும் திருநாவுக்கரசு நாயனரும் இங்கெழுந்தருளி யிருந்தபோது பஞ்சமுண்டாக பரமசிவம்

நாயன்மார் இருவருக்கும் படிக்காசு கொடுத்தருளி அவர்கள் மூலமாய் அடியார்களுக்கமுதளித்த அரும்பதி. சுவாமி தாம் ஸ்ரீகாழியிலிருக்குந்திருக்கோலத்தைத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு இங்குள்ள விண்ணிழிந்த விமானத்திலே காட்டியருளிய ஸ்தலம். விண்ணிழிவிமானம் திருமால்கொணர்ந்த தென்பதனை—"தன்றவம் பெரிய சலந்தர னுடலந் தடிந்தசக் கரமெனக் கருளென், றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத் திறையவன் பிறையணி சடையன்." என்னுந் தேவாரத்தாலறிக.

262. வெஞ்சமாக்கூடல்:

கருவூருக்குத் தெற்கே 12-மைல்; நல்லபாதை.

வேஞ்சன் என்னும் அசுரன் பூசித்த ஸ்தலம்.

263. திருவெண்காடு:

சீகாழிக்குத் தென்கிழக்கு 7-மைல்; நல்லபாதை.

வெள்ளையானை பூஜைசெய்து பேறுபெற்ற ஸ்தலம். தேவேந்திரன் வழிபட்டுப் பூசித்த ஸ்தலம். சோம, சூரிய, அக்கினி என்னும் முக்குளமுள்ள ஸ்தலம். இக்குளங்களில் ஸ்நானஞ் செய்வோர் நினைத்தகாரியம் தப்பாது சித்தியாகும். இதனைத்திருஞானசம்பந்தசுவாமிகள் இத்தலத்துக்கருளிச் செய்திருக்கும்—

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே."

என்னுந் தேவாரத்தால் அறியலாம்.

264. திருவெண்டுறை:

ராஜமன்னார் கோயிலுக்குக் கிழக்கு 13-மைல்.

வித்தியாதரர் முதலியோர் பூசித்த ஸ்தலம்.

265. திருவெண்ணி:

தஞ்சாவூருக்குக் கிழக்கே 12½-மைலிலுள்ள அம்மாபேட்டை ரெயில் ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 3½-மைல். நல்லவழி. நீடாமங்கலத்திலிருந்து மேற்கு 4-மைல் சென்றாலும் இத்தலத்தை அடையலாம்.



ROJA. MUTHIAH
ARTIST
KOTTAIYUR P O
RAMNAD DIST.

இவ்வாலயத்து விக்கிரகங்கள் அதிக சுந்தரமாயிருக்கின்றன. அம்மையார் விக்கிரகம் எல்லாவற்றைப்பார்க்கிலும் சுந்தரமாயிருக்கிறது. நந்தியாவர்த்தச்செடிகள் கோயிலில் நிறைந்திருக்கின்றன.

266. திருவெண்ணெய்நல்லூர்:

பண்ணுருட்டி ரெயில் ஸ்டேஷனிலிருந்து மேற்கே திருக்கோவலூருக்குப் போகும் பாதையில் 15-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இத்தலத்திலுள்ள ஆலயத்துக்கு 'திருவருட்டுறை' யென்று பெயர். இவ்வாலயத்தில் வீற்றிருக்கும் சிவபெருமான் சுந்தரமூர்த்திசுவாமிகளைத் தடுத்தாட்கொண்ட மூர்த்தி. மெய்கண்டதேவரென்னும் காரணப்பெயரையுடைய சுவேதவனப் பெருமாளாகிய சந்தானசாரியர் வீற்றிருந்தருளிய ஸ்தலம். இதற்குச் சமீபத்திலுள்ள புத்தூரிலே சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருமணமாகும் சமயத்திற் சிவபெருமான் ஒருவிருத்தப் பிராமணவேடங்கொண்டு, வந்துதடுக்க, மணந்தவிர்ந்தபடியால் அவ்வூர் 'மணந்தவிர்ந்தபுத்தூர்' என்று நாளைக்கும் வழங்கிவருகிறது. இவ்வூர் திருவெண்ணெய் நல்லூருக்குப் போம்வழியில் பண்ணுருட்டிக்கு மேற்கு 4-மைலிலிருக்கிறது. இதுவன்றி,'தடுத்தாட்கொண்டவூர்' என்றும் ஒருகிராமம் திருவெண்ணெய் நல்லூருக்குக் கிழக்கு $1\frac{1}{2}$-மைலிலிருக்கிறது.

267. திருவெண்பாக்கம்:

பாடல்பெற்ற ஆலயமிருக்கும் ஸ்தலம் இப்போது திருவுளம்பூதூர் என வழங்கிவருகிறது. சுந்தரமூர்த்திநாயனார் இந்த ஸ்தலத்துத் திருப்பதிகத்தின் ஒவ்வொருசெய்யுளிலும் "உளோம்போகீர் என்றானே" என்று அருளிச்செய்திருப்பதால் "உளோம்போகீர்" என்பது மருவி, "உளம்பூதூர்" என்றாகி, அதனுடன் "திரு" என்னும் மொழிசேர்ந்து, இந்த ஊருக்குத் திருவுளம்பூதூர் என்னும் பெயர் உண்டானதுபோல் தோற்றுகிறது. திருவெண்பாக்கம் என்னும்ஸ்தலம் பிரத்தியேகமாய்த் திருவுளம்பூதூருக்குத்தெற்கே $\frac{1}{2}$-மைல் தூரத்திலிருக்கிறது. அங்கும் ஒருசிறு ஆலயமிருக்கிறது.

சென்னபட்டணத்துக்கு மேற்கு 26-மைலிலுள்ள திருவெவ்வுளூர் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து வடக்கு $2\frac{1}{2}$-மைல் சென்று திருவெவ்வுளூர் க்ஷேத்திரத்தை அடைந்து, அங்கிருந்து மேற்கே

திருப்பாசூருக்குப் போகும்வழியில் ½-மைல் சென்று, அங்கே வடக்கே திரும்பி, நாகலாபுரம் சத்தியவேடு இந்த இடங்களுக்குப் போகும் வழியில் 1½-மைல் சென்று, அங்கே வழியைவிட்டு மேற்கே திரும்பி தங்கானூர், கொழுந்தலூர், வெண்பாக்கம் என்னுங் கிராமங்கள் வழியாய் சுமார் 2-மைல் சென்று, மறுபடி வடக்கே திரும்பி ½-மைல் சென்றால் திருவுளம்பூதூரை அடையலாம். திருவெவ்வுளூர் ரெயில் ஸ்டேஷனுக்கும் திருவுளம்பூதூருக்கும் 7-மைல்.

சுந்தரமூர்த்தி நாயனர் சங்கிலி நாச்சியாருக்குச் செய்த பிரமாணத்தை மீறி திருவொற்றியூரின் எல்லையைக்கடந்து சென்றமையால் பார்வையிழந்து இங்குவந்து சிவபெருமானைத் துதித்து ஊன்று கோல் பெற்ற ஸ்தலம்.

## 268. திருவேட்களம்:

சிதம்பரத்துக்குக் கிழக்கு 2-மைல். சாதாரண வழி.

ஆலயம் சிறிது. ஊரும் மிகவும் சிறிது. இப்போது 4-5 வீடுகள் தான் இருக்கின்றன. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் சிதம்பரத்திலே யிருப்பதற்கஞ்சி இங்கே இருந்துகொண்டு சிதம்பரத்துக்குப்போய்ச் சபாநாயகரைத் தரிசித்துவந்த ஸ்தலம்.

## 269. திருவேட்டக்குடி:

காரைக்காலிலிருந்து வடக்கே 5-மைல் சென்று, பின்பு கிழக்கே திரும்பி ¾-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

அருச்சுனன் தபசுசெய்து கொண்டிருக்கும்போது சிவபெருமான் வேடரூபமாக அவனுக்கு வெளிப்பட்டருளிய ஸ்தலம்.

## 270. திருவேதிகுடி:

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் வழியில் 6-மைல் தூரஞ்சென்று திருக்கண்டியூரை அடைந்து அங்கிருந்து கிழக்கே 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்குச் சமீபத்தில் வடகிழக்கில் 1-மைலில் திருச்சோற்றுத்துறையிருக்கிறது. இவ்விரண்டு ஸ்தலங்களுக்கும் மத்தியில் குடமுருட்டி ஆறு ஓடுகிறது.

திருவேதிகுடி சப்தஸ்தானங்களில் 4-வது ஸ்தலம்.

வேதங்கள் பூசித்த ஸ்தலம்.

## 271. திருவேள்விக்குடி:

மாயூரத்துக்கு மேற்கே 5½-மைலிலுள்ள குற்றாலம்ஸ்டேஷனில் இறங்கி வடகிழக்கு 3-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

இதற்கு வடமேற்கு 2-மைல் தூரத்தில் திருஎதிர்கொள்பாடி யும், அதற்கு வடகிழக்கு ½-மைலில் திருமணஞ்சேரியுமிருக்கிறது.

ஓரிராஜகுமாரனுக்கு மணம்புரிய நிச்சயித்திருந்த பெண்ணை, மணம் நிறைவேறுமுன் அவள் தாய்தந்தையர் இறக்கவே அவள் சுற்றத்தார் கொடாதொழிய, இராஜகுமாரன் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்ய, சிவபெருமான் அப்பெண்ணை ஒரு பூதத் தால். எடுப்பித்துக்கொண்டுவந்து அவனுக்குத் திருமணவேள்வி செய்தருளிய ஸ்தலம்.

## 272. திருவேற்காடு:

சென்னப்பட்டணத்துக்கு மேற்கு 13-மைலிலுள்ள ஆவடி என்னும் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து தெற்கே பூவிருந்தவல்லிக் குப்போகும் வழியிலே 3¾-மைல் சென்று, அங்கே வழியைவிட்டுக் கிழக்கே திரும்பி,"காடுவெட்டியாறு" என்று இப்போது வழங்கும் பழைய பாலாற்றைக் கடந்தால், அக்கரையில் இந்த ஸ்தலமிருக்கி றது. பூவிருந்தவல்லி இதற்குத் தெற்கே 2-மைலிலிருக்கிறது.

மூர்க்கநாயனர் திருஅவதாரஞ்செய்த ஸ்தலம். சிவபெருமான் அகஸ்தியருக்கு மணக்கோல தரிசனம் கொடுத்தருளிய ஸ்தலம்.

## 273. வைகன்மாடக்கோயில்:

மாயூரத்துக்கடுத்த ஆடுதுறை ரெயில்ஸ்டேஷனிலிருந்து தெற்கே 2-மைல் சென்று தென்னல்குடி என வழங்கும் திருநீலக் குடியைச்சேர்ந்து அங்கிருந்து தென்கிழக்கே 3-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

'வைகல்' என்பதற்குத் தென்மேற்கே ⅛-மைல் தூரத்தில் 'மாடக்கோயில்' இருக்கின்றது. இரண்டிடங்களிலும் கோயில்கள் உள்ளன. இரண்டையும் சேர்த்துத் திருஞானசம்பந்தசுவாமிகள் பதிகம் பாடி இருக்கிறார். இவ்வாலயம் கோச்செங்கட்சோழராற் கட்டப்பட்ட மாடக்கோயில்களுள் ஒன்று.

## 274. திருவைகாவூர்:

கும்பகோணத்திலிருந்து விஜயமங்கைக்குச் சொல்லியிருக்கும் வழியாக 8-மைல் சென்று, விஜயமங்கையை அடைந்து,அங்கிருந்து மேற்கே 1½-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இது சிவராத்திரிக்கு முக்கியமான ஸ்தலம்.


DBA000009408TAM

(நீக்கப்பட்டது.)

10. அரிசிற்கரைப்புத்தூர்: புகழ்த்துணை நாயனருடைய ஸ்தலம். இதனை இவ்வூருக்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத்தில் 6-ஆவது செய்யுளில்—

"அகத்தடிமை செய்யு மந்தணன்ற னரிசிற் புனல்
கொண்டு வந்தாட்டு கின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையு நம் முடிமேல்
விழுத்திட்டு நடுங்குத லும்
வருத்தவனுக்கு நித்தற் படியும் வருமென் றொரு
காசினை நின்ற நன்றிப்
புகழ்த்துணை கைபுகச் செய்துகந்தீர் பொழிலார்
திருப்புத்தூர்ப் புனித னீரே.''—என வருதலால் அறிக.

## அநுபந்தம் I.

5-மைல் தூரத்துக்குள் சமீபித்திருக்கும் ஸ்தலங்கள்.

I. ஆடுதுறை—(தென்குரங்காடுதுறை), 2. திருமங்கலக்குடி, 3. திருநீலக்குடி, 4. வைகன்மாடக்கோயில்.

II. திருஆரூர், 2. ஆரூர்அரநெறி, 3. ஆரூர்ப்பரவையுண்மண்டளி, 4. திருவிளமர், 5. பள்ளியின் முக்கூடல்.

III. திருஆவடுதுறை, 2. திருக்கோழம்பம், 3. திருக்கஞ்சனூர், 4. திருக்கோடிகா.

IV. திருவையாறு, 2. திருப்பழனம், 3. திருச்சோற்றுத்துறை, 4. திருவேதிகுடி, 5. திருக்கண்டியூர், 6. திருப்பூந்துருத்தி, 7. திருநெய்த்தானம், 8. திருவாலம்பொழில், 9. பெரும்புலியூர். 10. திருமழபாடி.

V. திருக்கடம்பந்துறை 2. திருவாட்போக்கி, 3. திருஈங்கோய்மலை. (குழித்தலை ரெயில் ஸ்டேஷன்.)

VI. காஞ்சீபுரம்: 1. கச்சியேகம்பம், 2. கச்சிமேற்றளி, 3. கச்சிஅனேகதங்காபதம், 4. கச்சிநெறிக்காரைக்காடு, 5. ஓணகாந்தன்தளி, 6. குரங்கணின்முட்டம்.

VII. கும்பகோணம்: 1. குடமூக்கு, 2. குடந்தைக்கீழ்க் கோட்டம். 3. குடந்தைக்காரோணம், 4. கலயநல்லூர், 5. கொட் டையூர், 6. இன்னம்பர், 7. திருநாகேச்ரம், 8. கருக்குடி. 9. சிவபுரம், 10. அரிசிற்கரைப்புத்தூர், 11. திருநறையூர் 12. திருவியலூர், 13. திருவலஞ்சுழி, 14. திருச்சத்திமுத்தம் 15. பட்டீச்சுரம், 16. பழையாறைவடதளி.

VIII. குற்றலம் (திருத்துருத்தி), 2. திருஅழுந்தூர், 3. எதி கொள்பாடி, 4. திருமணஞ்சேரி, 5. திருவேள்விக்குடி.

IX. திரிசிராப்பள்ளி, 2. மூக்கீச்சுரம் (உறையூர்), 3. தி ஆனைக்கா 4. பாச்சிலாச்சிராமம் (திருவாசி), 5. திருக்கற்குடி.

X. செம்பொன்பள்ளி, 2. நனிபள்ளி, 3 கடைமுடி, 4. ஆக்கூ

XI. தில்லைப்பதி, 2. திருவீழிமிழலை, 3. திருவன்னியு 4. அம்பர், 5. அம்பர்மாகாளம்.—(பூந்தோட்டம் ஸ்டேஷன்

XII. நன்னிலம், 2. இராமனதீச்சுரம், 3. திருக்கொண்ட சுரம், 4. சாத்தமங்கை, 5. திருச்செங்காட்டங்குடி, 6. திரு பனையூர், 7. திருப்புகலூர், 8. திருப்புகலூர் வர்த்தமானீச்சுர 9. திருமருகல், 10. திருவாஞ்சியம்.

XIII. 1. திருமீயச்சூர், 2. மீயச்சூர் இளங்கோயில், பாம்புரம், 4. சிறுகுடி, 5. திருவீழிமிழலை. (பேரளம் ஸ்டே

XIV. 1. திருவெண்காடு, 2. திருக்காட்டுப்பள்ளி, 3. க காழூர், 4. திருச்சாய்க்காடு, 5. காவிரிப்பூம்பட்டினம், 6. திரு வலம்புரம்.

XV. வைத்தீசுரன்கோயில், 2. திருப்புன்கூர், 3. திருக்கருப் பறியலூர், 4. திருக்குரக்குக்கா, 5. திருவாளொளிபுற்றூர், 6. மண்ணிப்படிக்கரை, 7. திருக்கண்ணார்கோயில்.

---

## அநுபந்தம் II.

I. பாண்டிநாட்டு ஸ்தலங்கள் 14-க்கும் வெண்பா:—

'கூடல் புனவாயில குற்றாலம் ஆப்பனூர்
ஏடகநெல் வேலி யிராமேசம்—ஆடானை
தென்பரங்குன் றஞ்சுழியல் தென்திருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணம்.'

11. அஷ்டவீரட்டங்கள்:—

கட்டளைக்கலித்துறை.

'பூமன் சிரங்கண்டி, அந்தகன் கோவல், புரம்அதிகை,
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மா பழுவூர்,
காமன் குறுக்கை, யமன் கடவூர், இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுங் திங்களுஞ் சூடிதன் சேவகமே.'

- திருக்கண்டியூர் ... ... பிரமன் சிரங் கொய்தது.
- திருக்கோவலூர் ... ... அந்தகாசுரனைச் சங்கரித்தது.
- திருஅதிகை ... ... திரிபுரத்தை எரித்தது.
- திருப்பறியலூர் ... ... தக்கன் சிரங் கொய்தது.
- திருவிற்குடி ... ... சலந்தராசுரனைச் சங்கரித்தது.
- திருப்பழுவூர் ... ... யானையை உரித்தது.
- திருக்குறுக்கை ... ... காமனை எரித்தது.
- திருக்கடவூர் ... ... யமனை உதைத்தது.

1I. சப்தவிடங்க ஸ்தலங்கள்:—

- திருவாரூர்
- திருநள்ளாறு
3. தி...கைக்காரோணம்
4. திருக்காறாயில்
5. திருக்கோளிலி
6. திருவாய்மூர்
7. திருமறைக்காடு.

சப்த ஸ்தான க்ஷேத்திரங்கள்:—

1. திருவையாறு
2. திருப்பழனம்
3. திருச்சோற்றுத்துறை
4. திருவேதிகுடி
5. திருக்கண்டியூர்
6. திருப்பூந்துருத்தி
7. திருநெய்த்தானம்.

V. காசிக்குச் சமானமாகச் சொல்லப்படும் ஸ்தலங்கள் 6:—

1. திருவெண்காடு
2. திருவையாறு
3. மாயூரம்
4. திருவிடைமருதூர்
5. திருச்சாய்க்காடு
6. திருவாஞ்சியம்.

VI. பஞ்ச பூத ஸ்தலங்கள்:—

1. திருவாரூர், அல்லது காஞ்சி
2. திருவானைக்கா
3. திருவண்ணாமலை
4. திருக்காளத்தி
5. சிதம்பரம்.

VII. பஞ்ச சபைகள்:—

1. திருவாலங்காடு—இரத்தினசபை
2. சிதம்பரம்—கனகசபை (பொன்னம்பலம்)
3. மதுரை—ரஜதசபை (வெள்ளியம்பலம்)
4. திருநெல்வேலி—தாமிரசபை
5. திருக்குற்றாலம்—சித்திரசபை.

VIII. புலியூர்கள்-வியாக்கிரபாதருஷி பூசித்த ஸ்தலங்கள்-ஐந்து:-

1. பெரும்பற்றப்புலியூர் (தென்புலியூர்)—சிதம்பரம்
2. திருப்பாதிரிப்புலியூர் (வடபுலியூர்)
3. ஓமாம்புலியூர்
4. எருக்கத்தம்புலியூர்
5. பெரும்புலியூர்.

IX. நாகராஜனாகிய ஆதிசேஷன் பூசித்த ஸ்தலங்கள் நான்கு:-

1. திருநாகேச்சுரம்
2. திருநாகைக்காரோணம்
3. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் (நாகேசுரசுவாமி)
4. திருப்பாம்புரம்.

X. தக்ஷிணகைலாசம் என்று சொல்லப்படும்க்ஷேத்திரங்கள் மூன்:

1. திருக்காளத்தி
2. திரிசிராப்பள்ளி
3. திருக்கோணமலை.

[வாயுவினால் பறித்துத் தள்ளப்பட்ட மேருமலையின் சி. கள் மூன்றிடங்களிலே விழுந்தன. அவைகளுள் ஒன்று திரு காளத்தி, ஒன்று திரிசிராமலை, ஒன்று திருக்கோணமலை.

'முன்னர் வீழ்ந்திடு சிகரிகா ளத்தியா மொழிவர்
பின்னர் வீழ்ந்தது திரிசிரா மலையெனும் பிறங்கல்
அன்ன தின்பிற கமைந்தது கோணமா அசலம்
இன்ன மூன்றையுந் தக்ஷிண கயிலையென் றிசைப்பார்.

—செவ்வந்திப்புராணம்]

XI. காயாரோகண ஸ்தலங்கள் மூன்று:—

1. கச்சிக்காரோணம் (இதற்குத் தேவாரமில்லை)
2. குடந்தைக் காரோணம்
3. நாகைக் காரோணம்.




National Library, Calcutta